*Nam nāṭu*

*Malar 5, itaḻ 54 [i.e. 55]*

*August 17, 1957*

Record no. 1131

REGD. NO. M. 6311 ★ தனி இதழ் 0—1—0 (7 காசுகள்) ★ இணைப்பில் 10 சதம் ★ PHONE: 85630

# நம் நாடு

தி.மு.க.தின இதழ் ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily. ★ The Official Organ Of The D.P.F.

மலர் 5] சென்னை: ஆவணி 1௨ சனி (17—8—57) ★ ★ வெளியூர்: ஆவணி 2௨ ஞாயிறு (18—8—57) [இதழ் 54

## ஒரு இலட்சம் டாலர் பெறுமான தங்கக் கார்!

### சவூதி அரேபிய மன்னருக்குப் பரிசு

பாரீஸ், ஆக. 15—

சவூதி அரேபிய மன்னருக்கு தங்கத்தாலான மோட்டார் கார் ஒன்று பரிசளிக்கப்பட்டிருக்கிறதாம்!

இதன் விலை, ஒரு இலட்சம் அமெரிக்க டாலர் என்று மதிப்பிடப்பட்டிருக்கிறதாம்!

இதனை, மெக்காவிற்கு அண்மையில் வருகைதந்த காதர்

(4-ம் பக்கம் பார்க்க)

# தவருன வழிகாட்டிய காங்கிரஸ் தலைவர்

## ஆக. 23: உழவர் அறப்போர் துவக்கம்

### நங்கவரத்தில் களம் அமைகிறது

குளித்தலை வட்டத்தில் விவசாயிகள் நிலத்திலிருந்து வெளியேற்றப்படுவதையும், உரிமை பறிக்கப்படுவதையும் அரசினருக்குப் பலமுறை எடுத்துரைத்தும் அரசினர், கேளாக் காதினராகிவிடவே, அறப்போரைத் தவிர வேறு வழியில்லை என்ற நிலையில் விவசாயிகள் தள்ளப்பட்டுள்ளதை விளக்கி, குளித்தலை வட்ட விவசாயிகள் முன்னேற்ற சங்கம் கீழ்க்கண்ட அறிக்கையை வெளியிட்டிருக்கிறது :—

இரண்டாம் பொதுத் தேர்தலில் தமிழகத்தில் காங்கிரஸ் கட்சி பெற்ற வெற்றிக்கு மிக முக்கிய காரணமாக விளங்கியது 'அறுபது—நாற்பது நியாயவாரச் சட்டமே'யாகும்—என்பதை காங்கிரஸ்காரர்களே எடுத்துக் கூறியிருக்கிறார்கள்; பொதுமக்களும் அறிவார்கள். 'அந்தச் சட்டம் விவசாயிகளுக்கென அளிக்கப்பட்ட புதிய வரப்பிரசாதம்—அட்சய பாத்திரம் — காமதேனு — கற்பக விருட்சம்' என்றெல்லாம் வர்ணிக்கப்பட்டது. தேர்தலில் ஓட்டு வேட்டையாடுவதற்கு மட்டுமே அந்தச் சட்டம் பயன்படுமே தவிர, நிலமுடையோருக்கும் பாடுபடும் விவசாயிகளுக்கும் இப்போதுள்ள சிறிதளவு நல்லுறவையும் கட்டிக்காத்து, இருசாராரும் பூரிப்படைவதற்குத் துணைபுரியும் வகையில் அமைக்கப்படவில்லை என்ற உண்மையை சட்டத்திலுள்ள ஓட்டை உடைசல்களைக் காட்டி பல சமயங்களிலும் விளக்கி வந்திருக்கிறோம்.

காங்கிரஸ் கட்சி மீண்டும் கொலு மண்டபம் புகுந்ததும் 'அறுபது-நாற்பது சட்டத்'தை அக்குவேறு ஆணிவேறாகப் பிய்த்தெறிந்து குளித்தலை வட்டார விவசாயிகள் அனுபவித்து வந்த குறைந்தபட்ச நன்மைகளையும் அழித்துவிடுகிற நிலைமைக்கு நீதிமன்றத்திலே தீர்ப்புப் பெற்றார்கள், நிலப்பிரபுக்கள்.

நெஞ்சிலே ஈவு இரக்கமுடைய நிலச் சொந்தக்காரர்கள் சிலரையும்கூட நீதிமன்றத்துத் தீர்ப்பு கல்நெஞ்சர்களாக்கிவிட்ட காட்சியைக் கண்டோம்!

சில இடங்களில் சட்டத்தையே தூக்கி மூலையில் வைத்துவிட்டு, ஒரு சில நல்ல மனம்கொண்ட மிராசுதாரர்கள் — உழைத்திடும் விவசாயிகள் இருசாராரும் தங்களுக்குள் சமரசம் செய்துகொண்டு, 'தற்கால சாந்தியாக இதுபோதும்' என்ற அளவில் ஒரு ஏற்பாட்டினைச் செய்துகொண்டு பயிர்த்தொழிலுக்குக் குந்தகம் ஏற்படாதவகையில் நடந்துகொள்கிற முறையையும் நாம் காணுகிறோம்.

இதயத்தையே எடுத்துவைத்துவிட்டுப் பிரச்சினையைப் பற்றிப் பேசுவதற்கு வருகிற நிலப்பிரபுக்களும், இதயமென ஒன்றே பெற்றிராத நிலப்பிரபுக்களும் விவசாயி எவ்வளவுதான் விட்டுக்கொடுத்துத் தனது கோரிக்கையை எழுப்பினும் அதற்குச் செவிசாய்க்க மறுக்கிறார்கள்.

குறிப்பாகவும் சிறப்பாகவும் நங்கவரம் நிலப்பிரபுக்களும், அவர்களுக்கு சிற்றரசுகள்போல் அமைந்துள்ள ஒரு சிலரும் நீதிமன்றத்தில் பெற்ற வெற்றியை அடித்தளமாகக் கொண்டு அதிலே விவசாயி சமுதாயத்துக்கு 'சமாதி' கட்டிவிடவே முடிவுசெய்து கிளம்பிவிட்டனர்.

சென்ற ஆண்டுவரையில் நிலங்களில் உரிமையோடு பாடுபட்ட விவசாயி இந்த ஆண்டு வெளியேற்றப்படுகிறான். 'சென்ற ஆண்டுபோலவே பழைய முறையிலேயே வயலில் பாடுபடுகிறோம்' என்று எடுத்துச்சொல்வதையும் நங்கவரத்தார் கேட்பதாயில்லை. 'கையேர், மாட்டேர் வாரக்காரர்களுக்கு என்ன முறைமை உள்ளதோ அதையே பெற்றுக்கொள்கிறோம்' என்று கூறியதையும் காதில் போட்டுக்கொள்ளவில்லை. விவசாயிகளிடம் பிளவை உண்டுபண்ணும் வகையிலும், அவர்களுக்குச் சாகுபடி செய்யும் உரிமையைச் சிறிது சிறிதாகச் சிதைக்கும் விதத்திலும் சிலந்திவலை பின்னுகிறார்களே தவிர, உண்மையான சமாசத்திற்கு இணக்கம் தெரிவிப்பதாயில்லை.

சட்டத்தின் ஊழலால் ஏற்பட்டுள்ள நெருக்கடியை நமது தொகுதி சட்டமன்ற உறுப்பினர் மு. கருணாநிதி அவர்கள் சட்டசபையில் பலமுறை விளக்கிக் கூறினார்.

அவரது தலைமையிலே விவசாய முன்னேற்ற சங்கத் தலைவர்களான குளித்தலை தி. வி. முத்துகிருஷ்ணன், கவுண்டம்பட்டி—முத்து ஆகியோரும் திருச்சி மாவட்ட தி. மு. க. செயலாளர் அம்பில்-தர்மலிங்கம் அவர்களும் அமைச்சர் பக்தவத்சலம் அவர்களைச் சந்தித்து நிலையை விளக்கினர், சென்னையில்!

பிறகு, கல்லணையில் அமைச்சரை கருணாநிதியின் தலைமையில் தூதுக் குழு சந்தித்தது. அமைச்சர் அதிகாரிகளிடம் பொறுப்பை ஒப்படைத்தார். கூலிகள் என எழுதிக்கொடுத்து நிலத்தில் இறங்க வேண்டியதில்லை என்றும், பழையமுறைமையை அனுசரித்து சென்ற ஆனடுபோல் நடந்துகொள்ளலாம்என்றும், அப்படி ஒரு ஒப்பந்தம் செய்து கொள்ளலாம் என்றும்அமைச்சர் முடிவுதெரிவித்தார்; விவசாயிகள் சம்மதித்தனர், அதற்கு!

பிறகு, 'நங்கவரம்' பின் வலித்துக்கொண்டு, அந்த வகை சமாசத்திற்கு உடன்பட மறுத்தது!

இறுதியாக, இம்மாதம் 11-ந் தேதி, குளித்தலையில், விவசாய அமைச்சரை, தூதுக்குழு சந்தித்தது. சமரச ஏற்பாடு காணவே முயன்றோம். 'நங்கவரம்' தன் பிடிவாதத்தை மாற்றிக் கொள்ளவில்லை. 'பழைய ஏற்பாட்டுக்கு சென்ற ஆண்டுபோலவே பாடுபடுகிறோம்' என சம்மதித்தும், 'நங்கவரம்' அதற்கு இணங்கவில்லை.

முடிவாக, பாடுபட்டுப் பயிர் வளர்த்து, வயிறு வளர்த்த ஏழைப் பாட்டாளி மகன், அவன் குடும்பத்தோடு, குழந்தை குட்டிகளோடு, வயலோரம் வாடி நிற்க, மலபார், மன்னார்குடிப் பகுதியிலிருந்து 'கருங்காலிகள்' கொண்டுவரப்பட்டு, அவர்கள் வயலில் வேலைசெய்கிற காட்சி நங்கவரத்தில் நடைபெறுகிறது.

இந்த அரசினரிடம் விவசாயிகளுக்குப் பாதுகாப்புக் கேட்டு அழுதோம்; புலம்பினோம்; ஆனால் அரசாங்கம் கொடுமையாளர்களுக்குப் பாதுகாப்புத் தர முற்பட்டுவிட்டது!

"அன்பார்ந்த பொதுமக்களே! ஏழையை உணர்ந்தவர்களே! நல்ல மனங்கொண்ட ஒருசில நிலச் சொந்தக்காரர்களே! நங்கவரம் கொடுமையை நீங்கள் அனுமதிக்கிறீர்களா?"

இதைத்தான் புலம்பும் நெஞ்சத்தோடுஏழைவிவசாயிகேட்கிறான்! ஏழையின் கண்ணீரை உணர மறுக்கும் மாநில அரசினருக்கு விவசாயி தனது கண்டனக் குரலை எழுப்பிக்காட்டத் துணிந்துவிட்டான்.

விவசாயிக்குரிய பாத்யதையைப் பறிக்கும் விதத்தில் புதிய ஆட்களைக் கொண்டு வயல்களில் அத்துமீறிப் பிரவேசித்து உழுது பயிரிடும் அக்ரமத்தை அரசாங்கம் கண்டிக்கும் என எதிர்பார்த்து ஏமாற்றமடைந்த விவசாயி, தனது உரிமையை நிலைநாட்டிக்கொள்ள ஆகஸ்டு 23-ம் நாள் முதல் வழக்கம்போல் வயல்களில் இறங்கி வேலைசெய்யத் துவங்குகிறான்.

'அவன் கேட்டது வாழ்வு!
கிடைப்பது சாவு!'

என்றால் அதைப் புன்சிரிப்போடு வரவேற்று, அணு அணுவாகச் சாவதைவிட ஒரேயடியாகச் சாவதுமேல் என்று சபதமேற்றுத் தன்னை ஒரு நல்ல காரியத்துக்கு அர்ப்பணித்துக்கொண்டு அமைதியான போராட்டத்தில் குதித்துவிட்டான்!

இந்த எமது முடிவு அவசர முடிவல்ல; பல முயற்சிகளிலும் பலன் காணமல் இறுதியில் வேறு வழியின்றித் தேர்ந்தெடுக்கப்பட்ட முடிவு!

அந்த முடிவினை நோக்கி நடைபோடும் விவசாயிகள் முன்னேற்ற சங்கத்தை வாழ்த்தி வழியனுப்புமாறு அனைவரையும் கேட்டுக்கொள்கிறோம்.

இங்ஙனம்,
விவசாயிகள் முன்னேற்ற சங்கம்,
(குளித்தலை வட்டம்)
14—8—57

## சென்னை நகரசபை

### அதிகாரி அம்பலமாக்குகிறார்

### சபையின் அனுமதியின்றி சேரி அபிவிருத்தி வேலைகளை சினிமாப் படம் பிடித்தார்களாம்!

தோழர் வி. முனுசாமி வெளிக்கொணர்ந்த தகவல்கள்

சென்னை, ஆக. 14—

நகரசபையையும், வரி விதிப்பு மற்றும் நிதி நிரந்தரக் கமிட்டியையும் கேட்காமல், அவற்றின்முன் அனுமதிபெறாமல், நகரசபை மேற்கொண்டிருக்கும் சேரி அபிவிருத்தி வேலைகளை சினிமாப் படம் பிடிக்க முற்பட்டு, ஆயிரக்கணக்கான ரூபாய் செலவிட்டதற்காக, நகரசபை கமிஷனரை எதிர்க்கட்சியினர் நேற்று கடுமையாகத் தாக்கினர்.

தோழர் வி. முனுசாமி (தி. மு. க.) அவர்கள், காங்கிரஸ் கட்சித் தலைவர் எம். இராதாகிருஷ்ணப் பிள்ளை அவர்கள்தான் கடந்த ஏப்ரல் திங்களில் கமிஷனருக்குக் கடித மூலம், இதுபோல படம் எடுக்கும் யோசனையையும், படம் எடுப்பதற்காக அணுகவேண்டிய பட்க் கம்பெனியின் பெயரையும் தெரிவித்திருக்கிறார் என்றும், அதன்பேரில் கமிஷனர் மேற்கொண்ட நடவடிக்கை, நகரசபைச் சட்டங்களுக்கும் விதிமுறைகளுக்கும் விரோதமானது என்றும் குற்றஞ்சாட்டினார்.

இந்தத் திட்டத்திற்கு ரூ. 80,000 செலவாகும் என மதிப்பிடப்பட்டிருப்பதாயும், இதுவரை ரூ. 19,000 செலவிடப்பட்டிருப்பதாகத் தனக்குத் தெரியவருவதாகவும், இந்தச் செலவுக்கு, சபையின் அனுமதியோ, நிரந்தரக் கமிட்டியின்முன் அனுமதியோ பெருதது சட்ட விதிகளை மீறுவதாகும் என்றும் அவர் எடுத்துக்காட்டினார்.

விவாதத்திற்குப் பதிலளிக்கையில் நகரசபை கமிஷனர் திரு. டி. பாலசுந்தரம் அவர்கள் கூறியதாவது :—

"காங்கிரஸ் கட்சித் தலைவரும் மேயரும் தந்த உறுதிமொழிகளின் பேரில்தான் நான், இந்த வேலையில் ஈடுபட்டேன். இவர்கள் இருவரும் எனக்கு, தவருன வழிகாட்டிவிட்டார்கள். நான் இந்தக் காரியத்தில் ஈடுபட்டது எந்தக் கெட்ட நோக்கத்துடனும் அல்ல; அல்லது, சபையின் உரிமைகளை மீற வேண்டும் என்றோ, அல்லது அவமதிக்க வேண்டும் என்றோ நான் கனவிலும் கருதவில்லை. நான் ஒவ்வொரு சின்ன விஷயத்திற்கும் இந்தச் சபையின் யோசனையையும், அனுமதியையும் பெற்று வந்திருப்பதை அறிவீர்கள். இந்த விஷயத்தில், காங்கிரஸ் கட்சித் தலைவரும், மேயரும் என்னைத் தவருன வழியில் ஈடுபடுத்தி விட்டார்கள். எனவே, உறுப்பினர்கள் எனது செயலை அனுதாபத்துடன் கவனிக்க வேண்டுகிறேன். "நான் இப்போது வலைக்குள் அகப்பட்டுவிட்டதாகக் கருதுகிறேன்; அதனால்தான், என் நிலையை நான் தெளிவுபடுத்த வேண்டியவனாயிருக்கிறேன்; காங்கிரஸ் கட்சித் தலைவரும், மேயரும் தந்த உறுதிமொழிகளை நம்பி மோசம் போய்விட்டேன் — தவறுகள் செய்துவிட்டேன்."

(விவாதத்தின் முழு விவரம் நாளை வெளிவரும்—ஆ-ர்)

## கலைவாணர் உடல்நிலை

சென்னை, ஆக. 17—

சென்னை மருத்துவமனையில் கலைவாணர் என். எஸ். கிருஷ்ணன் குணமடைந்து வருகிறார் என்றும், நேற்றைய தினத்தைவிட இன்று அவர் உடல்நிலை குணமடைந்துள்ளது என்றும் டாக்டர்கள் தெரிவித்துள்ளனர்.

## 'தமிழ் மாநிலம்' வேண்டும்

நாடகப் பேராசிரியர் அவா!

சென்னை, ஆக. 17—

சென்னை அரசாங்கம் அளித்த விருதைப் பெற்றுக்கொண்டு திரு. பி. சம்பந்தம் (முதலியார்) அவர்கள் பேசுகையில்,

"எனக்கு ஒரே ஒரு குறை; 'சென்னை இராஜ்ஜியம்' என்பதற்குப் பதிலாக 'தமிழ்நாடு' 'தமிழ் மாநிலம்' என்று அழைக்க வேண்டும்; நான் இறப்பதற்குமுன் இது ஏற்பட வேண்டும்; இதுதான் என் ஆசை" என்று மனவருத்தத்துடன் குறிப்பிட்டார்.

# நம் நாடு

தி.மு.க. தினஇதழ் — ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன்

சென்னை 17—8—57 சனி


# விழிப்புணர்வு வேண்டும்!

நமது இயக்கம் கண்ட மாபெரும் வெற்றிகளில் மிகவும் போற்றத்தக்கது, தமிழ்மொழியை, பல நெருக்கடிகளினின்றும் நாம் கைகொடுத்துக் காப்பாற்றி, குரல் எழுப்பி மக்கள் விழிப்புணர்ச்சியை ஒன்று திரட்டியதுதான் என்பதை—நமது இயக்க வரலாறு அறிந்தவர்கள் கூறுவர்.

இன்று தமிழ் ஆட்சி மொழியாக ஆக்கப்பட்டதுடன் 'தூய தமிழ்நடை வேண்டும்' என்று மக்கள் விரும்பும் கட்டம் வந்துள்ளது.

இந்த நேரத்தில் தமிழுக்கு மற்றொரு ஆபத்தை உண்டாக்கியுள்ளனர், வேறு மொழியினர்!

நீண்ட காலமாகவே, தூய, எளிய தமிழ் நடையில் எழுத வேண்டும்' என்ற கருத்தினைப் பரப்பிவந்த பெருமை நமக்கு உண்டு; எளிய தமிழ்ச் சொற்கள் ஏராளமாக இருக்கவேண்டுமென்றே மற்ற மொழிச் சொற்களை—குறிப்பாக வடமொழிச் சொற்களைப் புகுத்துவது தமிழ் மொழிக்கு ஏற்றதல்ல என்று நாம் பன்முறை வற்புறுத்தி வந்துள்ளோம்.

'பூ,' 'மலர்' என்ற சொற்கள் இருக்க, 'புஷ்பம்' என்று கூறுவானேன்? இல்லாதவன் தான் கடன் பெற கையேந்த வேண்டுமே தவிர, உள்ளவன் ஏன் பிச்சை எடுக்க வேண்டும்? கரும்பு இருக்க இரும்பை ஏன் தின்ன வேண்டும்?

இந்த அவல நிலைக்குக் காரணம் என்னவென்று எண்ணிப் பார்க்கும்போது, உண்மையில் தமிழ் தெரிந்தவர்களும், தமிழ் மொழி காவலர்களும் அவ்வாறு கூறவில்லை என்பது தெளிவுபடும். ஆனால் ஒருசிலர், பிடிவாதத்தின் காரணமாக, வேண்டுமென்றே தமிழ் மொழியின் வளர்ச்சியைத் தடைசெய்ய முனைந்துள்ளனர் என்றே எண்ணத் தோன்றுகிறது. ஆனால் அவர்களின் எண்ணிக்கையும் குறைவானது; அவர்களின் எண்ணமும் உகந்ததல்ல என்பதை நாம் கூறாமலே நாட்டு மக்கள் அறிந்துகொள்வார்கள் என்ற நம்பிக்கை நமக்கு உண்டு.

தமிழ் மொழிக்குத் தீங்கு நேரும்போது தமிழர் ஒன்றுபட்டுத் தீமையைத் தவிர்க்கவும், சதியை அம்பலமாக்கவும் தயங்கமாட்டார்கள் என்பதை அவர்கள் உணரவேண்டும் என்று நாம் கேட்டுக்கொள்ளும் அதே நேரத்தில், தமிழ் நாட்டின் பண்டைய வரலாற்று நிகழ்ச்சிகளையும் நினைவுபடுத்திக்கொள்ளுமாறு வற்புறுத்துகிறோம்.

'மற்ற மொழிகளிலிருந்து சொற்களைச் சேர்த்துக்கொள்வதால் தமிழ் மொழி சிறப்படையும்' என்று கூறுவது, தமிழ் மொழி செழிக்க செய்யப்பட்ட நல்ல முடிவு என்று நம்பக் கூடிய நிலையில் இல்லை; உள்ள நல்ல தமிழ்ச் சொற்களையும் இருட்டடிப்புச் செய்து, தமிழ் மொழியை ஒரு கலப்படமாக்கத் திட்டமிட்டுள்ளனர் என்றே கருதவேண்டியுள்ளது.

இன்றையத் தமிழர் சமுதாயம் இந்தப் பேராபத்தைத் தவிர்ப்பதற்கு விழிப்புணர்ச்சியுடன் இருக்கவேண்டும்.

தேவையற்ற பிற மொழிச் சொற்களை வேண்டுமென்றே கையாளும் முறையை ஒழிக்குவதற்கு வழி வகுக்க வேண்டும்.

தமிழ் மொழியில் இல்லாத சொற்கள் தமிழ் மொழியின் வளர்ச்சிக்காக உண்மையில் தேவை என்று கருதப்படுமானால் அத்தகைய சொற்களை புதுத் தமிழ் சொற்களாக ஏற்றுக் கொள்ளுவதில் தவறிருக்க முடியாது. ஆனால்உள்ள தமிழ்ச் சொற்களைவிட்டு, வேறு சொற்களைக் கையாள விடுவது, எதிர்கால தமிழர் சமுதாயத்திற்கு நாம் தீங்கையும், பெருந் துரோகத்தையும் இழைத்தவர்கள் ஆவோம் என்பதை ஒவ்வொருவரும் மனதில் கொள்ளவேண்டும்.

எளிய தமிழ்ச் சொற்களை, நாம் பேசும்போதும் எழுதும் போதும் கையாள வேண்டும். தமிழ் மொழி நலனைப் பற்றி அக்கறைக் கொண்டுள்ளதாகக் கூறிவரும் ஆட்சியாளர் உண்மையான தமிழ்ச் சொற்களைத் திரட்டி அகராதி ஒன்றை உருவாக்க வேண்டும்; இந்த முயற்சி, தமிழ்க் காவலர்கள், தூய தமிழ் மொழி அறிந்தவர்கள், பண்டைய தமிழ் ஏடுகளைக் கற்றறிந்தவர்கள் அனைவரும் ஏற்றுக்கொள்ளக் கூடிய தன்மையில் அமைதல் வேண்டும். தமிழ் மொழி வளத்தையும், பொருள் வளத்தையும் நன்கு மதிப்பிட்டே இதனைக் கூறுகிறோம். அதன் பிறகு தமிழ் மொழியின் வளர்ச்சிக்குத் தேவைப்படும் சொற்களை அவசியத்தை முன்னிட்டும், வசதியை முன்னிட்டும் கையாளக்கூடிய முறையில் சேர்த்துக்கொள்ளத் தகுதி உள்ளவைகளை ஏற்றுக் கொள்ள வேண்டும்.

இதை மறந்து, 'தூய தமிழ் நடை தேவை இல்லை' என்று கூறுவது, குருடன் பொருட்காட்சிசாலையில் என்ன உள்ளது என்று குறை கூறுவதுபோல் ஆகும் என்று குறிப்பிடுவதுடன், தமிழ் மொழியின் வளர்ச்சியைத் தடுக்க நினைப்பது கதிரவனை முறத்தால் மறைக்க நினைப்பதுபோலும் ஆகும் என்று சுட்டிக்காட்ட விரும்புகிறோம்.

தமிழர், தங்கள் மொழிக்குத் தாழ்வு நேரிடும் என்றால், துடித்தெழுவர் என்பது, நாடறிந்த ஒரு உண்மை!

## மாலடோவ் தற்கொலை?

நியூயார்க், ஆக. 15—

மாஸ்கோவில் நடைபெற்ற யுவர் விழாவில் அமெரிக்கப் பிரதிநிதியாக ஆபிரகாம் என்பவர் கலந்துகொண்டு திரும்புகையில், 'மாலடோவ் தற்கொலை' செய்து கொண்டதாகக் கேள்வியுற்றதாக அமெரிக்க ஏடுகளுக்கு செய்தி அனுப்பியுள்ளாராம்.

அமெரிக்க ஏடுகள் அதை ஆதாரமாகக்கொண்டு, பரபரப்பான செய்திகள் வெளியிட்டுள்ளனவாம்.



## நாகார்ச்சுனசாகர் அணைத் திட்டம்

இரண்டாவதுதிட்டத்தில் ரூ.32 30 கோடி ஒதுக்கப்பட்டது

புதுடில்லி, ஆக. 15—

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் நாகார்ச்சுனசாகர் அணைத் திட்டத்துக்காக ரூ. 32,30,00,000 ஒதுக்கப்பட்டிருக்கிறது என்றும், 1956—57ம் ஆண்டில் அதற்கு ரூ. 3,96,00,000; 1957—58ம் ஆண்டில் ரூ. 5½ கோடியும் ஒதுக்கப்பட்டது என்றும், ராஜ்யங்கள் சபையில் தகவல் தரப்பட்டிருக்கிறது.

## விசித்திரமான முடிவு!

பாட்னு, ஆக. 15—

பாட்னுவில் உள்ள கலெக்டர் அலுவலகத்தைச் சேர்ந்த 600 ஊழியர்கள் ஆக. 21-ந் தேதி முதல் அலுவலகத்திற்கு மிதியடிகள் அணியாமல் வருவார்கள்.

தங்கள் கோரிக்கைகள் ஏற்றுக் கொள்ளப்படும்வரை, இம்முறையைக் கையாள்வதென அவர்கள் முடிவு செய்துள்ளனர்.

## அமைச்சருக்குப் பாடம் கற்பித்தனர்!

கூட்டத்திலிருந்து மாணவர்கள் வெளியேறிவிட்டனர்

ஜோர்காக், ஆக. 15—

அசாம் மக்கள் கட்சி வேறுபாடு இல்லாமலும், மற்ற வேற்றுமைகளைப் பொருட்படுத்தாமலும், ஏகோபித்து அங்கள் மாநிலத்தில் எண்ணெய் சுத்திகரிப்புத் தொழிற்சாலை அமைக்க வேண்டும் என்று கோரிக்கை எழுப்பியும்கூட, மத்திய அரசாங்கம் பீகார் மாநிலத்தில் அத்தொழிற்சாலையை ஏற்படுத்துவதென முடிவு செய்த எதேச்சாதிகாரப் போக்குக்கு நியாயம் கற்பித்துப் பேச முயன்றுள்ளார் அம்மாநில நிதி அமைச்சர் பொதுக் கூட்டமொன்றில்!

தொழிற்சாலை சம்பந்தமான ஆர்ப்பாட்டத்தை அவர் கண்டித்துப் பேசுவதை மக்கள் சகியாது, அமைச்சருக்கு எதிராகக் குரலெழுப்பினராம்; பெரும்பாலும் மாணவர்களடங்கிய அக்கூட்டம் நிதி அமைச்சரைக் கண்டித்து, கூட்டத்தைவிட்டு வெளியேறினராம்.

## உலக நீதிமன்றத்தில் இந்தியாமீது வழக்கு

போர்ச்சுகல் தொடர்ந்துள்ளது

பம்பாய், ஆக. 15—

இந்தியாமீது போர்ச்சுகல் வழக்கு தொடர்ந்துள்ளது. இந்த வழக்கு ஹேக்கில் உள்ள உலக நீதிமன்றத்தில் விசாரணைக்கு வருகிறது.

இந்தியா சார்பாக வாதிட பம்பாய் பிரதம நீதிபதி சக்ளா செல்கிறார்.

கோவாவிலிருந்து இந்தியப் பகுதி வழியாக தாத்ரா, நாகர் ஹாவேலி ஆகிய போர்ச்சுகீசியப் பகுதிகளுக்குச் செல்ல உரிமை வேண்டும் என்று போர்ச்சுகல் கோரியுள்ளது.

அமெரிக்காவிலிருந்து 5,000 டன் எடுத்த பால் தூள் இந்தியாவில் இறக்குமதியாகும்; இதில் 3,000 டன் கல்கத்தாவுக்கும், 2,000 டன் சென்னைக்கும் விநியோகமாகும்.

# இன்னும் ரூ. 1,200 கோடி வேண்டுமாம்

## இரண்டாம் திட்ட தேவைகள் பற்றி நிதிமந்திரி

புதுடில்லி, ஆக. 15—

"இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தை நிறைவேற்றி வைப்பதற்காக, அந்நிய செலாவணியாக 1960—61-ம் ஆண்டுக்குள் இந்திய சர்க்காருக்கு இன்னும் ரூ. 1,200 கோடி தேவைப்படும்"

என்று, இந்தியப் பேரரசின் நிதி மந்திரி டி. டி. கிருஷ்ணமாச்சாரி மக்கள் சபையில் தெரிவித்திருக்கிறார்.

"இந்தப் பெரும் பள்ளத்தைத் தூர்க்கவேண்டுமானால், இந்தியா தனது அந்நிய நாட்டு வருமானத்தை அதிகரித்துக் கொள்ளவேண்டும்; அதே போது, அந்நிய நாட்டிற்குப் பணம் போகாமல் தடுக்க வேண்டும்"

என்றும், கேள்வி ஒன்றுக்குப் பதிலளிக்கையில் குறிப்பிட்டிருக்கிறார்.

## சீமான்களுக்குச் சலுகையா?

புதுடில்லி, ஆக. 15—

முழுவதும் மலைப் பகுதி, மற்றும் ஓரளவுக்கு மலைப் பகுதியாக உள்ள பல்வேறு இந்திய இரயில்வேப் பகுதிகளில் பிரயாணிகள், மற்றும் சாமான்கள் மீது வசூலிக்கப்படும் உயர்ந்தபட்ச கட்டணத்தைக் குறைக்க இரயில்வே முடிவு செய்துள்ளதாம்.

இத்தகைய பகுதிகள், பெரும்பாலும் சீமான்கள் கோடைக் காலத்தில் சென்று களிப்புடன் காலம் கடத்திவரும் பகுதிகள் என்பதைத் தெளிவுபடுத்த அவசியமில்லை.

மேட்டுப்பாளையம், உதகை முதலிய பகுதிகளில் இரயில் கட்டணம் குறைக்கப்படலாம்.

## ஆந்திரா, கேரள மாநிலங்களில் தொழிற்சாலைகள்

மக்கள்சபையில் தகவல்

புதுடில்லி, ஆக. 14—

"ஆந்திரப் பிரதேச மாநிலத்தில் கூட்டுறவு முறையில் ஒன்றும், தனிப்பட்டவர்களால் இரண்டும் ஆக மூன்று நெசவாலைகள் துவங்கப்படும்"

என்று மக்கள்சபையில் உதவி வர்த்தக மந்திரி சதீஷ்சந்திரா தெரிவித்திருக்கிறார்.

மேலும், 'கேரளத்தில் ஒரு மின்சாரக் கம்பித் தொழிற்சாலையும் நிறுவப்படும்' என்றும் தொழில் மந்திரி மனுபாய் ஷா தெரிவித்திருக்கிறார்.

## மீன் பிடிக்கும் தொழில் அபிவிருத்தி

ரூ.12 கோடி செலவிடப்படும்

இந்தியாவில் மீன் பிடிக்கும் தொழில் சுமார் 4,21,000 பேருக்கு வேலை வாய்ப்பளித்து வருகிறது; இத்தொழிலின் மூலம் ஆண்டுதோறும் சுமார் ரூ. 10 கோடி வருமானம் கிடைக்கிறது.

ஆண்டில் மீன் உற்பத்தி சுமார் 12 இலட்சம் டன் என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது; அதில் 70 சதவிகிதம் கடல் மீன் பிடிப்பிலிருந்தும், நதிமுக மீன் பிடிப்பிலிருந்தும் கிடைக்கிறது.

ஆண்டுதோறும் சுமார் 27,000 டன் மீன் உற்பத்திப் பொருள்கள் அண்டை நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றன; அவைகளில் பெரும்பகுதி கருவாடும், உப்பிடப்பட்ட பச்சை மீன்களுமே யாகும்.

இந்நாட்டின் குறைந்தபட்ச தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கு 40½ இலட்சம் டன் மீன் தேவைப்படும் என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது.

இப்போது மீன் பிடிப்பதற்கு சுமார் 70,000 படகுகளும் கட்டுமரங்களும் உபயோகப்படுத்தப்படுகின்றன; இவைகளைக்கொண்டு கடலில் நெடுந்தூரம் சென்று மீன் பிடிப்பது சாத்தியப்படாது.

சென்ற சில ஆண்டுகளில் பம்பாயில் சுமார் 600 படகுகளுக்கு விசை மோட்டார்கள் பொருத்தப்பட்டுள்ளன. இதன் பயனாக பம்பாயில் மீன் உற்பத்தி நான்கு மடங்காகப் பெருகியிருக்கிறது,

கொச்சி, விசாகப்பட்டணம், போர்ட் பிளேர் ஆகியவிடங்களில் மூன்று பரீட்சார்த்த மீன் பிடிப்பு நிலையங்களை அமைப்பதற்கான திட்டமொன்று பரிசீலனையில் இருந்துவருகிறது.

மீன் பிடிப்புத் தொழிலின் முக்கியத்துவத்தை முன்னிட்டு, இத்தொழிலின் அபிவிருத்திக்காக இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ரூ. 12 கோடி ஒதுக்கப்பட்டிருக்கிறது.

# 'தலைவர்கள் வடக்கே-தொண்டர்கள் தெற்கே என்ற நிலை ஏன்?'

## தாம்பரத்தில் தோழர் க. அன்பழகன் பேச்சு

தாம்பரம், ஆக. 15—

13—8—57 மாலை 6 மணிக்கு தாம்பரம் பஸ் நிலைய மைதானத்தில் தி. மு. கழகப் பொதுக் கூட்டம் ஒன்று நடைபெற்றது. கூட்டத்திற்கு தலைமை தாங்கிய திரு. முனு. ஆதி (தாம்பரம் பஞ்சாயத்து துணைத் தலைவர்) 'தொழிலாளர் பகுதியில் நாம்' என்ற பொருள் பற்றிப் பேசினார்.

அடுத்து தோழர் வி. எஸ். கோவிந்தராசன் பேசுகையில், 'நம்மை புதிதாக ஒரு சில தாய்மார்களைவிட்டு ஏசவைத்திருக்கிறது காங்கிரஸ்; நாம் கடந்த ஒன்பதாண்டு காலமாகப் பலரால் ஏசப்பட்ட எச்சினாலே தான் இவ்வளவு விரைவாக வளர்ந்தோம்' என்று கூறினார்.

இறுதியில் தோழர் க. அன்பழகன் எம்.எல்.ஏ. அவர்கள் பேசுகையில் குறிப்பிட்டதாவது:—

"இன்று நாட்டிலுள்ள எதிர்க் கட்சிகளை எடுத்துக்கொண்டால் எல்லாவற்றிற்கும் தலைமைப் பீடங்கள் டில்லியிலே இருக்கின்றன. தலைவர்கள் அங்கேயும், தொண்டர்கள் இங்கேயுமாக இருக்கின்றனர். ஆட்சியில் நம்மை அடிமைப்படுத்தி வைத்திருக்கும் வடநாட்டார், கட்சிகளிலும்கூட நம் நாட்டினரை அடிமைப்படுத்தி வைத்திருக்கின்றனர்; அப்படிப்பட்ட கட்சிகள் நமக்கு வேண்டாம்.

"இன்றுள்ள சர்வதேச நோக்காளர்கள், இன்றுள்ள, செயல்படமுடியாத சிலவற்றை மட்டுமே கூறுகின்றனரேயன்றி, திராவிட முன்னேற்றக் கழகத்தைப்போல் பழந்தமிழர் வாழ்ந்த விதம்—வரலாற்றைப் பற்றியும், இன்று தாழ்ந்த நிலையைப் பற்றியும் யார் கூறுகின்றனர்?

"தென்னாடு வாழ — சகல வளத்திலும் வளப்பமான நம் தாய் நாடு வாழ—வழி செய்ய தி. மு. கழகத்தால்தான் முடியும்."

மேலும் அவர் பேசுகையில், நாம் சட்டமன்றத்தில் நுழைந்த பிறகு சட்டசபை எவ்வளவு விழிப்பும் உணர்வும் பெற்றிருக்கிறது என்பதை விளக்கினார்.

கூட்டத்தில் தோழர்கள் எல்ல. இராசமாணிக்கம், அன்பரசன் ஆகியோரும் பேசினர்,



# 'கண்ணகியை மறந்து சானகியையும் - சாவித்திரியையும் சிறப்பிப்பதேன்?'

## திருக்குறள் கழகத்தில் புலவர் எழுப்பிய வினா

புதுக்கோட்டை, ஆக. 15—

"பண்டைக்காலத்துத் தமிழரும், இலக்கியங்களும், தமிழ்மகன் ஒவ்வொருவனும் சான்றோனாய்த் திகழ வேண்டுமெனக் கனவு கண்டனர்; நடைமுறையில் வாழ்ந்தும் காட்டினர். சான்றோன் எனின் முற்றுந்துறந்த முனிவரல்லர்; இல்லற நெறி நின்று, அறத்தாற்றி சமுதாயத்திற்குத் தொண்டு செய்வோர் ஆவர். இளங்கோ அடிகள் முதற்கண் இயற்கையை வாழ்த்தி அடுத்துச் சான்றோருக்கு இடம் கொடுத்து அமைத்து உள்ளார். வள்ளுவரும் கடவுள் வாழ்த்துக்குப் பின்னர் சான்றோரை அமைத்துள்ளார். கண்ணகியும் மதுரையில் கணவனை இழந்த பின்னர்க் கதறிய சொல்லில் 'சான்றோரும் உண்டு கொல்; சான்றோரும் உண்டு கொல்' என்பதையும் உற்று நோக்கி உணரல் வேண்டும்"

என்று, அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ் ஆராய்ச்சித் துறைத் தலைவர் பேராசிரியர் ஜி சுப்பிரமணிய பிள்ளை அவர்கள், 11—8—57-ல், புதுக்கோட்டை திருக்குறள் கழகத்தின் இலக்கியச் சொற்பொழிவுத் தொடரிலே நகர் மண்டபத்தில் ஆற்றியசொற்பொழிவின்போது கூறினர்.

அவர் மேலும் குறிப்பிட்டதாவது:—

"தமிழரின் நாகரிகத்தைத் தெற்றென விளக்குவது சிலப்பதிகாரம்; தனித்தமிழ் இலக்கியம் சிலப்பதிகாரம். கண்ணகி என்பது அழகிய பெயர்; 'சிரிக்கும் கண்ணையுடையவள்' என்பதாகும். கற்பின் பெருமைக்கு நம்மனோர் சானகியையும், சாவித்திரியையும் சித்தரிப்பர்; கண்ணகியின் கற்பையும், ஆதிமந்தி தன் கணவனை மீட்டதையும் அவர்கள் அறியாதவராவர்.

"சிலப்பதிகாரம் திருவள்ளுவரின் 'தெய்வந்தொழா அள்' என்ற குறளுக்கு இலக்கியமாக அமைந்து விளங்குகின்றது. பண்டைத் தமிழர் ஒவ்வொருவரும், ஒவ்வொரு குறிக்கோளுடன் விளங்கினர். இத்தகைய குறிக்கோளில் வாழ்ந்த கண்ணகியை 'ஒரு மாமணியாய் உலகுக்கோங்கிய திருமாமணி' என்று வாயார மனமாரப் புகழ்கிறார். இதனால் தமிழரின் நாகரீகம் உலகமெலாம் பரவிப் போற்றப்பட வேண்டுமென்கிறார். இலக்கிய நயம் நிறைந்த நாட்டின் ஒப்பற்ற இலக்கியமாம் சிலப்பதிகார வாயிலாகப் பெண்ணின் கற்புக்கு உயர்வு தந்த இளங்கோ வாழ்க. கண்ணகியின் வழியிலே ஒவ்வொரு பெண்ணும் நின்று, ஒழுகி நாட்டின் பெருமையைச் சிறக்கச் செய்ய வேண்டும்."

# அன்பின் வடிவமான பெண்கள்....

## 'பழைமைப் பிடியிலிருந்து விடுபட வேண்டும்'

பய்யானூர் (கேரளம்), ஆக. 15—

பெண்களுக்கு ஆயுதப் பயிற்சி அளிப்பதைத் தாம் விரும்பவில்லை என்று ஆச்சாரியா விநோபா பாவே அவர்கள் கூட்டம் ஒன்றில் கூறியிருக்கிறார்கள்.

"உணர்ச்சிவயப் படக்கூடிய ஆண்களை, சாந்தப்படுத்துகிற பெண்களின் இயற்கையான சக்திக்கு ஆயுதப் பயிற்சி உகந்ததல்ல"

என்றும் பாவே அவர்கள் கூறியிருக்கிறார்.

"அன்பின் வடிவமான பெண்கள், தங்களது இயற்கையான வேலையைச் சரிவரச் செய்ய உறுதியான — அதேபோது அன்பான இதயம் படைத்தவர்களாகவும், தளராத தன்னம்பிக்கை உடையவர்களாகவும் இருக்க வேண்டும்.

"பெண்கள், செத்து ஒழியப் போகும் பழைமைப் பழக்கவழக்கங்களிலிருந்து விடுதலை பெற்றாக வேண்டும்; மேலும் ஆபரணங்கள்மீது தங்களுக்குள்ள பிரியத்தையும் விட்டொழித்தாக வேண்டும். இந்த விஷயங்களில்தான் பெண்கள் தங்கள் சுதந்திரத்தைப் பயன்படுத்தவேண்டுமே தவிர, ஆண்களுக்கான வேலைகளைத் தாங்களும் செய்வது என்பதற்கு அல்ல"

என்றும் விநோபா பாவே அவர்கள் கருத்தறிவித்திருக்கிறார்.

# செய்திச் சுருள்

★

### சென்னை — சிந்தாதிரிப்பேட்டை அறிவு வளர்ச்சி மன்றம்

5—5—57-ல், தோழர் மணிவண்ணன் தலைமையில் நடைபெற்ற மேற்படி மன்றக் கூட்டத்தில், நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்:—தலைவர்: சிராமுலு; செயலாளர்: தே. விசயராகவன்; துணைச் செயலாளர்: து. ஆறுமுகம்; பொருளாளர்: மோ. ராதாகிருட்டினன்.

### சென்னை 5-வது வட்டம் மஜீத் மன்றம்

5—5—57-ல், தோழர் சே. எஸ். அப்துல்ரகீம் தலைமையில் நடைபெற்ற கூட்டத்தில் நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்:—தலைவர்: இராமமூர்த்தி; துணைத் தலைவர்: எ. எம். அபூபக்கர்; செயலாளர்: ந. இராசமன்னார்; துணைச் செயலாளர்: கே. முகம்மது இப்ராகிம்; பொருளாளர்: ரு. ஆறுமுகம்; 15 பேர் செயற்குழு உறுப்பினர்கள்.

### காஞ்சி நெடுஞ்செழியன் படிப்பகத் துவக்க விழா

12-5-57-ல், காஞ்சி—பிள்ளையார்பாளையம் கிருஷ்ணராயர் தெருவில், நெடுஞ்செழியன் படிப்பகத் துவக்க விழா தோழர் எ. இலட்சுமணன் தலைமையில் நடைபெற்றது. தோழர்கள் காஞ்சி-கல்யாணசுந்தரம், இரா. வெங்கடேசன், டி. சீனிவாசன், மாணவி-நற்குணம் ஆகியோர் பேசிய பின்பு அண்ணா அவர்கள் படிப்பகம் துவக்குவதால் ஏற்படும் நற்பலன்களையும் நாட்டுக்கு நாம் செய்யவேண்டிய நல்லவைகளையும் பற்றி விளக்கவுரையாற்றினர்.

### திருச்சி—சங்கிலியாண்டபுரம் மக்கள் முன்னேற்ற மன்றத் திறப்பு

12—5—57-ல் மேற்படி மன்றத்தைப் பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள் திறந்துவைத்தார்; தோழர்கள் மு. கருணாநிதி, எம். எஸ். மணி, தொ. ப. கோபாலகிருஷ்ணன் ஆகியோர் பேசினர். மன்றச் செயலாளராக துரை இராசு; துணைச் செயலாளராக செல்வராசு; பொருளாளராக வேலு தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### பெரிய ஊர்ச்சேரி சத்தியவாணிமுத்து படிப்பகம்

12—5—57-ல், மதுரை மாவட்டம் அலங்காநல்லூர் வட்டம், பெரியஊர்ச்சேரியில், தி. மு. கழக ஆதரவாளர்களால் மேற்படி மன்றம் துவக்கப்பட்டு நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்:—செயலாளர்: கோ. வி. பாலராசன்; துணைச் செயலாளர்: மு. தமிழரசு; பொருளாளர்: நாகூர்-கனி, வெள்ளை; விளம்பர உறுப்பினர்கள்: ஆனை அழகேசன், முகம்மது, இப்ராகீம்.

### மதுரை இளங்கோ மன்றம்

18—5—57ல் பாண்டியவேளாளர் தெருவிலுள்ள மேற்படி மன்றத்தின் உறுப்பினர்கள் கூட்டம், மு. சந்தானம் தலைமையில் நடைபெற்றபோது புதிய நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்:—செயலாளர்: அ. குருசாமி; துணைச் செயலாளர்: மு. சங்கர்; பொருளாளர்: எ. கே. கோபால்; செயற்குழு உறுப்பினர்கள் 13 பேர்.

### திருவோணம் வள்ளுவர் படிப்பக 2-வது ஆண்டு விழா

18—5—57ல் தோழர் முத்து தங்கப்பா தலைமையில் மேற்படி விழா நடைபெற்றது. தோழர் பாலன் ஆண்டறிக்கை வாசித்தார்; பின்னர் புதிய நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்:—செயலாளர்: வீ. இராமசாமி; துணைச்செயலாளர்: இ. தங்கசாமி; பொருளாளர்: ந. இரத்தினசாமி.

### பட்டிவீரன்பட்டி, சௌந்திரபாண்டியனுர் நினைவு இளைஞர் மன்றப் படிப்பகம்

10—5—57ல் தி. மு. கழக உறுப்பினர்களாலும், இளைஞர்களாலும் மேற்படி மன்றப் படிப்பகம் பாண்டியன் திடலுக்கருகில் துவக்கிவைக்கப்பட்டு, நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்:—செயலாளர்: மா. தர்மராசன்; துணைச்செயலாளர்: ப. கே. புவனேந்திரன்; பொருளாளர்: மா. பாசுக்கரன்; விளம்பர உறுப்பினர்: ஞா. கனகராசன்.

### ஆர்பூர் திருவள்ளுவர் கழகம்

14—5—57 நடைபெற்ற கூட்டத்தில் ஷை மன்ற நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்:—தலைவர்: ஆர். சம்பங்கி; துணைத் தலைவர்: வெ. வரதராசன்; செயலாளர்: எம். கே. எம். உஸ்மான்; துணைச்செயலாளர்: எ. மாணிக்கம்; பொருளாளர்: கு. ஆனந்தம்; கௌரவத் தலைவர்: எம். நடேசன்.

### சென்னை—இராயப்பேட்டை முத்தமிழ் முன்னேற்ற மன்றம்

19—5—57ல் தோழர் சு. செல்வராசன் தலைமையில் நடைபெற்ற மன்றப் பொதுக் குழுக் கூட்டத்தில் புதிய நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்:—செயலாளர்: அ. தாயமணி; துணைச் செயலாளர்: ப. குப்புசாமி; பொருளாளர் தி. செல்வமணி; செயற்குழு உறுப்பினர்கள் 9 பேர்.

### காட்டுமன்னார்குடி சத்தியவாணிமுத்து சொற்பயிற்சி மன்றம்

23—6—57ல் மேற்படி மன்றத்தின் துவக்கவிழா நடைபெற்றது. புலவர் ஆறுமுகம் மன்றத்தைத் திறந்துவைத்தார்.

### தாம்பரம் வள்ளுவர் மன்றம்

21—5—57-ல், நடைபெற்ற ஷை மன்றத்தின் கூட்டத்தில் புதிய நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்:— செயலாளர்: பம்மல்-நல்லதம்பி; துணைச் செயலாளர்: வை. வேதாசலம்; பொருளாளர்: சி. இரா. செகதீசன்; பொறுப்பாளர் ந. திருப்பால்.

### கீழக்கோட்டை, கே. வி. கே சாமி நினைவுப் படிப்பகம் திறப்பு

22—5—57-ல் ஷை மன்றம் சின்னாளப்பட்டி, கீழக்கோட்டையில் தோழர் க. அன்பழகன் எம். எல். எ; அவர்களால் திறந்து வைக்கப்பட்டது. அன்று மாலை நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் தோழர்கள் க. அன்பழகன், மெய்யப்பன்; மாவீரன் மற்றும் பலர் பேசினர் சு. துவாரகதாஸ் தலைமை வகித்தார்.

### திருக்கோகர்ணம்—குமரவேல் நினைவு மன்றம்

24—5—57-ல் தோழர் டி. பி. கிருஷ்ணன் தலைமையில் நடைபெற்ற கூட்டத்தில் நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்:—செயலாளர்: இரா. கிருஷ்ணமூர்த்தி; துணைச் செயலாளர்: பி. அந்தோணி; பொருளாளர்: எஸ். சதாசிவம்; மற்றும் செயற்குழு உறுப்பினர்கள் 6 பேர்.

### சேலம்—ஆத்தூர் அண்ணா படிப்பகம்

24—4—57-ல், மேற்படி படிப்பகத்தின் பொது உறுப்பினர் கூட்டம் தோழர் எம். பி. சுப்பிரமணியம் எம். எல். எ; தலைமையில் நடைபெற்றபோது நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்:—செயலாளர்: எஸ் கே. மாணிக்கம்; துணைச் செயலாளர்: எ. குள்ளப்பன்; பொருளாளர்: கே. பெரியசாமி; செயற்குழு உறுப்பினர்கள் எழுபேர் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### பழந்தண்டலம் மாணவர் மன்றம்

24—5—57-ல், தோழர் கிருட்டினன் தலைமையில் மாணவர் மன்ற இரண்டாம் ஆண்டுவிழா நடைபெற்றது. தோழர்கள் கா. அப்பாதுரையார், அன்பரசு, பிச்சுமணி, மு. இராசமாணிக்கம் ஆகியோர் சொற்பொழிவாற்றினர் திரு. அப்பாதுரையாருக்கு வாழ்த்து மடல் படித்தளித்து 501 புதிய காசுகளும் வழங்கப்பட்டது.

### சேவூர் கைத்தறி நெசவாளர் சங்கம்

5—6—57-ல் திரு. எம். பி. சொக்கலிங்கனார் தலைமையில் நடைபெற்ற கூட்டத்தில் சேவூர் (வ. ஆ.) கைத்தறி நெசவாளர் சங்கம் அமைக்கப்பட்டு நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்:—தலைவர்: இ. செயராமன்; துணைத் தலைவர்: டி. வேதபுரி; செயலாளர்: எ. டி. கோபால்; துணைச் செயலாளர்: கே. எம். இரங்கசாமி; பொருளாளர்: பி. எம். இராசரத்தினம்; செயற்குழு உறுப்பினர்கள் 14 பேர்.

### மதுரை பொன்னகரம் பகுத்தறிவுப் படிப்பகம்

26—5—57-ல் ஷை படிப்பகத்தின் ஆண்டுவிழா தோழர் ஆர். எஸ். இராசன் தலைமையில் நடந்தது. தோழர்கள் சி. பி. சிற்றரசு, எஸ். முத்து, எம். எஸ். இராமசாமி, இராமாநுசம், ஆகியோர் சொற்பொழிவாற்றினர்.

பின்னர் நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்:—செயலாளர்: பே. பொன்னுசாமி; துணைச் செயலாளர்: எம். இராமய்யா; பொருளாளர்: ம. சு. மணி; விளம்பர உறுப்பினர்: நாரணன்; செயற்குழு உறுப்பினர்கள் 11 பேர்.

### புதுக்கோட்டை பாண்டியன் படிப்பகம்

புதுக்கோட்டை சாந்தநாதபுரம் 3-ம் வீதியிலுள்ள பாண்டியன் படிப்பகத்தின் பொதுக்குழுக் கூட்டம் 2—6—57-ல் நடைபெற்றபோது நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்:— செயலாளர்: முருகையா; துணைச் செயலாளர்: பழனியாண்டி; பொருளாளர்: பி. கருப்பையா, செயற்குழு உறுப்பினர் 4 பேர்.

### அய்யம்பாளையம் அண்ணா மன்றம்

16—5—57-ல் நடைபெற்ற ஷை மன்ற உறுப்பினர்கள் கூட்டத்தில், தோழர் எ. எஸ். அண்ணாசாமி பொறுப்பாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

### திண்டுக்கல் உதய சூரியன் படிப்பகத் திறப்புவிழா

16—6—57-ல் மேற்படி விழா தோழர் என். முத்து அவர்கள் தலைமையில் நடைபெற்றது. டி. கே. சீனிவாசன் படிப்பகத்தைத் திறந்து வைத்து சொற்பொழிவாற்றினர்.

### சென்னை - தூளை அண்ணா மன்றம் துவக்கம்

17—6—57-ல் மேற்படி மன்றம் துவக்கப்பட்டு நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்:— தலைவர்: ராமுலு; செயலாளர்: கோ. இறையரசு; துணைச் செயலாளர்: ஆர். கே. சாமி; பொருளாளர்: பி. சி. சீனிவாசன்; செயற்குழு உறுப்பினர்கள் 5 பேர்.

### சென்னை - 7வது வட்டம் அழகிரி மன்றம்

23—6—57ல் மேற்படி மன்றத்தின் பொதுக் குழுக் கூட்டம் நடைபெற்றபோது புதிய ஆண்டின் நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்:—செயலாளர் பே. தா. இன்மொழியன்; துணைச் செயலாளர்: ஆர். சுப்பராயன்; பொருளாளர்: தேவராஜ்; பொறுப்பாளர்: எஸ். மணி.

### சென்னை—புரசை முத்தமிழ்மன்றம்

14—7—57-ல், மேற்படி மன்றத்தின் இரண்டாம் ஆண்டுப் பேரவை கூடியது. அதுபோது, நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்:—தலைவர் ஜெ. எத்திராசன்; செயலாளர்: வே. பக்தவத்சலம்; துணைச் செயலாளர்: ர். நாராயணன்; பொருளாளர்: ர. இராமச்சந்திரன்; செயற்குழு உறுப்பினர்கள் 5 பேர்.

### திருப்பரங்குன்றம் திராவிடர் பகுத்தறிவு மன்றம்

21—6—57-ல், மேற்படி மன்றத்தின் 4-ம் ஆண்டு விழா தோழர் பி. சுப்பிரமணியம் தலைமையில் நடைபெற்றது. தோழியர் சத்தியவாணிமுத்து எம்.எல்.எ.; தோழர்கள் மதுரை எஸ். முத்து; திண்டுக்கல் சு... தர்மம் ஆகியோர் சொற்பொழிவாற்றினர்.

கப்பல் கட்டும் கலையிலும், கப்பல்துறை எஞ்சினீயரிங்கிலும் ஐந்து வருடப் பட்டப் படிப்பு ஒன்று கரக்பூர் இந்தியத் தொழில் நுட்ப நிலையத்தில் நடத்தப்படுகிறதென்றும், ஆண்டுதோறும் 12 பேருக்குப் பயிற்சியளிக்கப்பட்டு வருகிறதென்றும் மக்கள் சபையில் தகவல் தரப்பட்டிருக்கிறது.

# ஆட்சியாளரின் பரிசு பெற்ற கலைஞர்களுக்குப் பாராட்டு விழா

## தென்னிந்திய நடிகர் சங்கச் சார்பில் எம். ஜி. ஆர்., எஸ். எஸ். ஆர். வரவேற்பு

சென்னை, ஆக. 17—

நாடகப் பேராசிரியர் சம்பந்தனார், தமிழறிஞர் டாக்டர் மு. வரதராசனார், இசைச் செல்வம் கே. பி. சுந்தராம்பாள் ஆகிய மூவருக்கும் தமிழக அரசினர் பரிசுகள் வழங்கி சிறப்பித்தமைக்கு, தமிழக அரசினரைப் பாராட்டவும், மகிழ்ச்சி தெரிவிக்கவும், தென்னிந்திய நடிகர் சங்கச் சார்பிலும், புரட்சி நடிகர் எம். ஜி. இராமச்சந்திரன் அவர்களது முயற்சியிலும் நேற்று இரவு 8 மணியளவில் சென்னை உட்லண்ட்ஸ் ஒட்டலில் சிறப்புமிக்கதோர் விழா நடைபெற்றது.

விழாவினையொட்டி முதலில் நடைபெற்ற பல்சுவை விருந்தில் ஏராளமான பிரமுகர்களும், நடிக-நடிகையரும், முக்கியஸ்தர்களும் பங்கேற்று சிறப்பித்தனர்.

விருந்திற்குப் பின்னர் துவங்கிய விழாவில் இலட்சிய நடிகர் எஸ். எஸ். இராசேந்திரன் அனைவரையும் வரவேற்று, சென்னை நகரமேயர் சீனுவாசன் அவர்களை விழாவுக்குத் தலைமையேற்கும்படி கேட்டுக்கொண்டார்.

மேயர் அவர்களது தலைமை உரைக்குப் பிறகு நாடகப் பேராசிரியர் சம்பந்தனார், டாக்டர் மு. வரதராசனார், திருமதி கே. பி. சுந்தராம்பாள் ஆகியோர் தென்னிந்திய நடிகர் சங்கச் சார்பில் புரட்சி நடிகர் எம். ஜி. இராமச்சந்திரன் அவர்களால் மாலை யணிவித்து சிறப்பிக்கப்பட்டனர்.

அரசினரது பாராட்டினைப் பெற்ற இம்மும்மணிகளது கலைத் திறமையை எம். ஜி. ஆர். அவர்கள் புகழ்ந்துகூறி, கலைஞர்களுக்கு அளிக்கப்படும் இதுபோன்ற பரிசுகள் மென்மேலும் பெருக வேண்டும் எனக் கேட்டுக்கொண்டார்.

பின்னர் அண்மையில் மலேயா சென்று திரும்பிய தோழர் டி. கே. சண்முகம் அவர்கள், பரிசு பெற்ற கலைஞர்களை வாழ்த்திப் பேசினர்,

தொடர்ந்து நடிகர்கள் சிவாஜி-கணேசன், தங்கவேலு, டைரெக்டர் சுப்பிரமணியம், கெம்ப்ராஜ் ஆகியோர் பரிசு பெற்ற கலைஞர்களைப் பாராட்டியும், வாழ்த்திப் பேசியும், மாலையணிவித்துச் சிறப்பித்தனர்.

பின்னர், கலைவாணர் என். எஸ். கே., நடிப்பு-இசைப் புலவர் கே. ஆர். இராமசாமி, டைரெக்டர், சுப்பிரமணியம் எஸ். வி. சகஸ்ரநாமம், கே. சாரங்கபாணி, டி. ஆர். இராமச்சந்திரன், லலிதா—பத்மினி—ராகினி சகோதரிகள் ஆகியோர் சார்பாகவும், எம். ஜி. ஆர். நாடக மன்றம், சிவாஜி-நாடக மன்றம், சேவா ஸ்டேஜ், பாரத் பைன் ஆர்ட்ஸ், கலாநிகேதன், கச்சாலீஸ்வரர் கானசபா, கலைத் தொழிலாளர்கள் சார்பாகவும் கலைஞர்களுக்கு மலர் மாலைகள் அணிவிக்கப்பட்டன.

பின்னர் தங்களுக்கு அளிக்கப்பட்ட வரவேற்புகளுக்கும் பாராட்டுகளுக்கும், நாடகப் பேராசிரியர் சம்பந்தனார், டாக்டர் மு. வரதராசனார், திருமதி கே. பி. சுந்தராம்பாள் ஆகியோர் நன்றி தெரிவித்துப் பேசினார்கள்.

சென்னை சர்க்கார் சார்பில் நிதியமைச்சர் சுப்பிரமணியம் அவர்கள் கலைஞர்களைப் பாராட்டிப் பேசினார்.

விழாவில் சென்னை கவர்னர் திரு. ஜான், திருமதி ஜான், சென்னை முதலமைச்சர் காமராசர், அமைச்சர்கள், சுப்பிரமணியம், பக்தவத்சலம் முதலியவர்களும், தென்னிந்திய நடிகர் சங்க உறுப்பினர்களும், முக்கியஸ்தர்கள் பலரும் கலந்துகொண்டனர்.

விருந்தினரை புரட்சி நடிகர் எம். ஜி. இராமச்சந்திரன் இலட்சிய நடிகர் எஸ். எஸ். இராசேந்திரன் ஆகியோர் வரவேற்று உபசரித்தனர்.

## மூவருக்கு விருதுகள்

சென்னை சர்க்கார் வழங்கியது

சென்னை, ஆக. 17—

கலைத்துறை மேதை பம்மல் திரு. சம்பந்தம், இலக்கியத் துறை மேதை டாக்டர் வரதராசனார், இசைத்துறை மேதை கே. பி. சுந்தராம்பாள், ஆகிய மூவருக்கும் சென்னை அரசாங்கம், விருதுகள் வழங்கியுள்ளது. சுதந்திர விழாவையொட்டி இந்த ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

விழாவுக்கு திரு. காமராசர் தலைமை வகித்தார். விழா சிறப்பாக இராஜாஜி மண்டபத்தில் நடைபெற்றது.

விருதுகளை சென்னை மாகில கவர்னர் சான் அவர்கள் வழங்கியுள்ளார்.

## உ. பி. சட்டசபைக்கு அலங்காரம்

ரூ. 5 இலட்சம் செலவிட சிபாரிசு

உ. பி. மாகில சட்டசபைக் கட்டிடத்தைப் புதுப்பிக்கவும், அலங்கரிக்கவுமாக ரூ. 5 இலட்சம் செலவிட அதற்கென நியமிக்கப்பட்ட உபகுழு சிபாரிசு செய்திருக்கிறதாம்.

## தமிழ்த் தென்றல் - தொழிலாளர் தலைவர் திரு. வி. க. பெயரால் சென்னையில் நகர்

### தொழிலாளருக்கான குடியிருப்பு துவக்கம்

சென்னை, ஆக. 16—

பெரம்பூர் செம்பியம் அருகே திரு. வி. க.வின் பெயரால், தொழிலாளர் குடியிருப்பு ஒன்று 'திரு. வி. க. நகர்' என்ற பெயரில் துவங்கப்பட்டிருக்கிறது.

இந்தக் குடியிருப்பில் 468 வீடுகள் தொழிலாளருக்காக நிர்மாணிக்கப்பட்டுள்ளன.

'திரு. வி. க. நகர்' என்ற இந்தக் காலனியை முதன் மந்திரி காமராசர் இன்று காலை திறந்து வைத்திருக்கிறார்.

மறைந்த தமிழ்த் தென்றல்—தொழிலாளர் தலைவரான திரு. வி. க. அவர்களின் வெண்கலத்தாலான உருவச் சிலை ஒன்றினை, நகரில், நிதிமந்திரி சுப்பிரமணியம் திறந்துவைத்திருக்கிறார்.

ஏராளமான தொழிலாளர்கள் இந்தக் குடியிருப்பு திறப்பு விழாவில் கலந்து கொண்டிருக்கின்றனர்.

நகரசபைக் கமிஷனர் பாலசுந்தரம் அனைவரையும் வரவேற்றுப் பேசுகையில், இந்தக் குடியிருப்பு நிர்மாண வேலை 1955 ஜூலையில் துவங்கியது என்றும், இப்போது அநேகமாக முடிந்து விட்டது என்றும், மொத்தம் உள்ள 468 வீடுகளில் இப்போது 71 வீடுகள் தொழிலாளருக்குத் தரப்பட்டுள்ளன என்றும், வீடுகளுக்கு வாடகையாக மாதம் ரூ. 10 வசூலிக்கப்படும் என்றும், தொழிற்சங்க இயக்கத்தின் தந்தையாக விளங்கிய திரு. வி. க.-வின் பெயரால் நகர் அமைவது மிகப் பொருத்தம் என்றும் குறிப்பிட்டிருக்கிறார்.

முதன் மந்திரி காமராசரும், நிதிமந்திரி சுப்பிரமணியமும், திரு. வி. க. அவர்களின், தமிழ் மொழிப் பற்று, தாய் நாட்டுப் பற்று முதலியவற்றையும் அவரது பல துறைப் பணிகளையும் பாராட்டிப் புகழ்ந்து பேசினார்கள்.

## சரித்திர ஏடுகளை அழித்துவிடமுடியாது!

பம்பாய், ஆக. 16—

அந்நியராட்சியை ஒட்டிய சில சிலைகளை அகற்றவேண்டும் என்ற கோரிக்கைபற்றிய கூட்டம் ஒன்றில் குறிப்பிடுகையில், பம்பாய் கவர்னர் ஸ்ரீபிரகாசா, 'சில படங்களை அகற்றி விடுவதினாலேயோ, அல்லது சிலைகளை அகற்றி விடுவதினாலேயோ சரித்திர ஏடுகளை அழித்துவிட முடியாது' என்று கூறியிருக்கிறார்.

# வடநாட்டு எத்தர்களின் மோசடி வேலை

## வேலை தருவதாகவும் கடன் கொடுப்பதாகவும் மக்களை ஏமாற்றுகிறார்கள்

### பொதுமக்களுக்கு சென்னை போலீசார் எச்சரிக்கை

சென்னை, ஆக. 16—

சில வடநாட்டு எத்தர்கள், ஏராளமான தொகை கடன் வாங்கித் தருவதாகவும், நல்ல வருவாயுள்ள உத்தியோகம் தேடி தருவதாகவும் விளம்பரம் செய்து இந்த நாட்டு மக்களை ஏமாற்றி வருவதாக சென்னை துப்பறியும் போலீசாருக்குத் தெரிய வந்திருக்கிறதாம்!

இந்த எத்தர்கள், தமிழ் நாட்டில் பிரபல பத்திரிகைகளில் பிரமாதமாக விளம்பரம் செய்து எதுமறியாத மக்களிடமிருந்து பணம் பறிக்கும் மோசடியில் திட்டமிட்டு ஈடுபட்டிருப்பதாகவும், இவர்கள், நாளுக்குநாள் எண்ணிக்கையில் வளர்ந்து வருவதாகவும், இவர்களின் விஷயத்தில் எச்சரிக்கையாக இருக்க வேண்டுமெனவும், இவர்களிடம் ஏமாந்து பணம் தந்துவிட வேண்டாம் என்றும் போலீசார் மக்களுக்கு எச்சரிக்கை விடுத்திருக்கின்றனர்.

விளம்பரம் செய்யும் அந்தக் கம்பெனிகளின் யோக்கியப் பொறுப்பு பற்றி, விளம்பரம் செய்யும் பத்திரிகைகளின் மானேசர்களுக்கு எழுதுமாறும், போலிக் கம்பெனிகளைப் பற்றிய தகவல்களைப் போலீசாருக்குத் தெரிவிக்குமாறும் போலீசார் கேட்டுக் கொள்கிறார்கள்.

## ஒரு இலட்சம் டாலர்...

(1-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

மன்னரான எமீர் அலி தானி மன்பார் பரிசளித்திருக்கிறாராம்!

கதவுப் பிடிப்புகள், இதர உலோக பாகங்கள் எல்லாம் உறுதியான தங்கத்திலேயே செய்யப்பட்டனவாம்!

டிரைவரின் ஆளுகைக்குட்படும் பாகங்கள் மட்டும் வெள்ளியினாலானவையாம்!

ஏழு பேர்வரை தாராளமாக உட்காரக்கூடிய இந்தக் கார், தானாகவே இயங்கும் தட்பவெப்ப சாதனமுடையதாம்!

## திருச்சி மாவட்ட

### தி. மு. க. செயற்குழு அவசரக் கூட்டம்

★

"25—8—57 ஞாயிறு பிற்பகல் 3-மணிக்கு குளித்தலையில் திருச்சி மாவட்ட தி. மு. க. செயற்குழுவின் அவசரக் கூட்டம் நடைபெறும்; மாவட்ட உறுப்பினர்கள் தவறாமல் வர வேண்டுகிறேன்.

பொருள்: நங்கவரம் விவசாயிகள் போராட்டம்.

"புதிதாகத் துவக்கப்பட்டு, தலைமைக் கழகத்துக்குப் பதிவு செய்ய அனுப்பி, மாவட்டக் கழகத்துக்கு அனுப்பாமலிருக்கும் கிளைக் கழகங்களின் பிரதிநிதிகளும், இதையே அழைப்பாகக் கொண்டு, வர வேண்டுகிறேன்"

என, திருச்சி மாவட்டச் செயலாளர் தோழர் அ. பெ. தர்மலிங்கம் கேட்டுக் கொள்கிறார்.

## கழகக் கூட்டங்கள்

★

**முரப்பநாடு:**

(நெல்லை)

வள்ளுவர் சதுக்கத்தில்

22—8—57 இரவு 7 மணிக்கு

தலைவர்:

இரத்தினவேல் பாண்டியன்

பேசுவோர்:

என். வி. நடராசன்

டி. ஆர். சுப்பிரமணியம்

என். சங்கரலிங்கம்

எம். எஸ். அரியமுத்து

★

**கணியூர்:**

'உதயசூரியன்' திடலில்

20—8—57 இரவு 7 மணிக்கு

தலைவர்: இருளப்பர்

பேசுவோர்:

சத்தியவாணிமுத்து எம். எல். ஏ.

கே. என். சரபோஜி

கே. ஏ. கிருஷ்ணசாமி

### திருவள்ளுவர் முன்னேற்றக் கழக ஆண்டுவிழா

18—8—57 காலை 8½ மணிக்கு சென்னை 16-வது வட்டம் திருவள்ளுவர் முன்னேற்றக் கழக 2-வது ஆண்டு விழாவும் திருவள்ளுவர் நினைவு நாளும் தோழர் எம். ஆர். கண்ணன் தலைமையில் நடைபெறும் தோழியர் சத்தியவாணிமுத்து எம். எல். ஏ. கலந்துகொள்வார். பலர் சொற்பொழிவாற்றுவர். பகல் 11-30 மணிக்கு ஏழைகளுக்கு உணவளித்தலும், மாலை 3 மணிக்கு மாணவர் மாணவிகளின் விளையாட்டுப் பந்தயங்களும் நடைபெறும்.

### நடிப்பிசைப் புலவர் தலைமையில் நாடகம்

17-8-57 மாலை 6-30 மணிக்கு நடிப்பிசைப் புலவர் கே. ஆர். இராமசாமி அவர்கள் தலைமையில் 'பழமையின் கொடுமை' என்னும் நாடகம், சென்னை தாசப்பிரகாஷ் ஒட்டல் மண்டபத்தில் நடைபெறும்.

### திருக்குறள்சொற்பொழிவு

18—8—57 காலை 10-மணிக்கு பட்டாளம் ஸ்டான்ஸ் சாலை ஆண்கள் பள்ளியில் சென்னைக் கல்விச் சங்கத்தின் ஆதரவில் 'சான்றாண்மை' என்னும் பொருள்பற்றி, திரு. வ. சுப்பிரமணியம் தலைமையில் தொ. இர. செயராமன், கு. வே, இராமகோடி ஆகியோர் பேசுவர்.

### டி. கே. எஸ். குழுவினர் தாயகம் திரும்பினர்

சென்னை, ஆக. 17—

கடல் கடந்து சென்று கலைத் தொண்டாற்றிய டி. கே. எஸ். நாடகக் குழுவினர் கடந்த வியாழனன்று சென்னைவந்து சேர்ந்தனர். அவர்களுக்குக் கலைஞர்கள் வரவேற்பளித்தனர்.

## சேலம் மாவட்ட

### தி. மு. க. செயற்குழுக் கூட்டம்

"25—8—57 ஞாயிறு காலை 11-மணிக்கு, சேலம் மாவட்ட தி. மு. கழகச் செயற்குழுக் கூட்டம், சேலம் நகரக் கழக அலுவலகத்தில் நடைபெறும். எல்லாக் கிளைகளின் மாவட்டப் பிரதிநிதிகளும் தவறாது வருகை தருமாறு கேட்டுக்கொள்கிறேன்."

என்று, சேலம் மாவட்ட தி. மு. கழகத் துணைச் செயலாளர் தோழர் பி. இராமலிங்கம் கேட்டுக் கொள்கிறார்.

### மதுரை நகர தி. மு. க. செயற்குழுக் கூட்டம்

18—8—57 காலை 10-மணிக்கு மதுரை நகர தி. மு. க. செயற்குழுக் கூட்டம் நடைபெறும்; செயற்குழு உறுப்பினர் அனைவரும் தவறாது வருமாறு நகரச் செயலாளர் பி. கே. சேதுராமன் கேட்டுக்கொள்கிறார்.

### இளைஞர் கல்விக் கழக முதலாண்டு விழா

18—8—57 மாலை 6-மணியளவில், சென்னை—எழுகிணறு மலையப்பன் தெருவிலுள்ள மேற்படி கழகத்தின் முதலாண்டு விழா, ஜீவபந்து டி. எஸ். சீபால் தலைமையில் நடைபெறும்; நகராண்மைக் கழக உறுப்பினர் தோழர் வி. முனுசாமி, தோழர்கள் கோ. வில்வபதி, தா. அழகுவேலனார், சிறுவை மோகனசுந்தரம், எம். ஏ. சண்முகநாதன், சொர்ணம் முதலியோர் கலந்துகொள்வர்.

### அ. இ. புகைவண்டி நிலைய அதிகாரிகள் சங்கம்

18—8—57 பிற்பகல் 2மணிக்கு மேற்படி சங்க தென் மண்டல சென்னை பகுதி மாநாடு எழும்பூர் பொருட்காட்சி சாலை மண்டபத்தில் திரு. காசா சுப்பாராவ் தலைமையில் நடைபெறும்; மாலை 6-15 மணிக்கு சென்னை நகரசபைத் தலைவர் திரு. சீனிவாசன் தலைமையில் 'புகைவண்டி நிலைய அதிகாரி' (ஸ்டேஷன்-மாஸ்டர்) என்னும் நாடகம் நடைபெறும்.

### டாக்டர் சி. நடேசனார் இரவுப்பள்ளி

19—8—57 மாலை 6-30 மணிக்கு, தி. மு. கழகத் துணைப் பொதுச்செயலாளர் என். வி. நடராசன் அவர்கள், பெத்துநாய்க்கன்பேட்டை, முருகேச முதலித் தெருவிலுள்ள மேற்படி பள்ளியின் வகுப்பைப் பார்வையிடுவார்.

### சொற்பயிற்சிக் கூட்டங்கள்

18—8—57 காலை 10-மணிக்கு சென்னை பிராட்வே, 4-88 எண்ணுள்ள 11-வதுவட்ட தி. மு. க. பணிமனையில் தோழர் என். இராமதாஸ் தலைமையில் 'வள்ளுவர் கண்ட நாடு' என்னும் பொருள்குறித்துப் பலர் பேசுவர்.

* * *

18—8—57 மாலை 5-மணிக்கு, காட்டுமன்னார்குடி சத்தியவாணிமுத்து சொற்பயிற்சி மன்றத்தின் 5-வது கூட்டம் எய்யலூர் கிராமத்தில் நடைபெறும்; 'பொதுமக்களும், தி. மு. கழகமும்' என்பதுபற்றிப் பலர் பேசுவர்.

### புதுமனை புகுவிழா

18—8—57 காலை 9 மணிக்கு சென்னை—சேப்பாக்கம் 40-வது வட்ட தி. மு. க. கிளையின் 'புதுமனை புகுவிழா' சி. என். கிருட்டினசாமி சாலை, 75 எண்ணுள்ள இல்லத்தில் நடைபெறும்.

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன் எம்.ஏ., அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று, (24. [illegible] செட்டித் தெரு, [illegible]புரம், சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன் எம்.ஏ.

